Registered No. M. 1229.

உ

பொங்கும் மங்களம் எங்கும் தங்குக.

# விவேகோதயம்

மதுரை மாணவர் செந்தமிழ்ச் சங்கத்தினின்று

வெளிவரும்

## மாதாந்தத் தமிழ்ப் பத்திரிகை.

அறிவுடையார் எல்லாம் உடையார்; அறிவிலார்
என்னுடைய ரேனும் இலர்" - திருக்குறள்.

தொகுதி உ. { பிங்கள௵ ஐப்பசிமீ 1917௵ அக்டோபர்மீ } பகுதி க.

பொருளடக்கம்.



சொந்தக்காரர்:— ம. கோபாலகிருஷ்ணையர்

ம. கோபாலகிருஷ்ணையர் }
வி. பாலம்மாள் } பத்திராதிபர்.

திருமங்கலம் ஸ்ரீகிருஷ்ண விலாசம் அச்சியந்திரசாலை

வருஷ சந்தா ரூ. 2-0-0. 1917. [தனிப்பிரதி அணா 3

வெளி நாடுகளுக்கு ரூ. 2-4-0.



மதுரை எக்ஸெல்ஸியர் பிரஸில் டைடில் மாத்திரம் அச்சிடப்பட்டது.

# அமிர்தாரணவ லேகியம்.

இந்த லேகியம் ரத்தத்தை சுத்தி செய்து விர்த்தியாக்கி, நரம்பு ஸ்தானங்களை எல்லாம் பலப்படுத்தி, தேகச்சூடு, பித்தவாயு, கைகால் கண்ணெரிச்சல், இவைகளைச் சமனஞ் செய்து, மூளையைக் குளிரப்பண்ணி, தேக பலத்தையும் மேனியையும் உண்டாக்குகின்றது. மேலும் இம்மருந்து நாள்பட்ட க்ஷயம், கிரஹணி, நீடித்ததலைநோய், மார்புவலி முதலிய வியாதிகளையும் கண்டிக்கின்றது. எவ்வித பத்தியமுங் கிடையாது.

20-தோலா கொண்ட டப்பி 1-க்கு ரூபா 2—0—0

எங்கள் கியாட்லாக் இனமாய் அனுப்பப்படும்.

இனிமையானது! பரிமளமிகுந்தது!

# மணி ஆயில்.

முப்பத்தைந்து வருஷ காலமாய் விற்பனையாகி வருகிறது.

இந்தக் கூந்தல் தைலம் சாஸ்திர முறைப்படிசெய்யப்பட்டிருக்கிறது. அலங்காரத்துக்கு யோக்கியமான மனோகரமான சுகந்தமுள்ளது. சிரசில் உபயோகித்து வந்தால் ரோமங்களை உதிராமற்றடுத்து, நீண்டு அடர்த்தியாய் வளரும்படி செய்கிறது. தற்காலம் வெளிவந்துலாவும் தைலங்களைப் போல் கருதி விடக்கூடாது. ஒரு தடவையாவது வாங்கி உபயோகித்து உண்மையையறியுங்கள். சிரசுக்குத் தடவ்வதனல் மூளைக்குக் குளிர்ச்சியையுண்டுபண்ணக்கூடியது. இது ஒன்றுதான். புட்டி 1-க்கு ரூ 1. ஐந்து புட்டி ஒரு தடவையில் வாங்கினல் விலை:ரூ-4. வி.பி.செலவு பிரத்தியேகம். இன்னும் விபரம் வேண்டுவோர் எங்கள் கியாட்லாக்குக்கு எழுதுங்கள்.

வைத்திய சாஸ்திரி,

**மணிசங்கர்கோவிந்தஜி,**

ஆதங்க நிக்கிரக ஔஷதாலயம்,

**45=மேலக்கோபுரவீதி,**

மதுரை.

# சர்வதேள் விஷ சஞ்சீவி.

"கதறி வந்தவன் களிப்புடன் செல்வான்!"
"விஷம் தீண்டினவன் நிமிஷத்தில் குணமடைவான்!"

குணமில்லாவிட்டால் ரூ. 100 இனும் கொடுக்கப்படும்.



நண்பர்களே! ஒவ்வொருவீட்டிலும் தேளினுடைய உபத்ரவம் பொறுக்க முடியாமல் அவஸ்தைப்படுவதை நாம் அனைவரும் கண்டு விசனமுற நேரிடுவதைப்பற்றி, நாம் அதிக கஷ்டப்பட்டு இதற்காக உயர்ந்த மருந்து கண்டுபிடித்திருக்கிறோம். இது அநேக ஐரோப்பிய டாக்டர்களாலும், தமிழ் வைத்திய பண்டிதர்களாலும், நன்கு மதிக்கப்பெற்றது. எமது மேற்கண்ட லங்கர் மார்க்குள்ள சர்வதேள் விஷ சஞ்சீவியைத் தேள் கொட்டின விடத்தில் உபயோகிக்க உடனே ஒன்றிரண்டு நிமிஷத்திற்குள் குணமடையச் செய்யும். இவ் விஷ சஞ்சீவியை இன்னும் எலி, நாய், பூரான், செய்யான், பாம்பு, நண்டுத் தெறுக்கால் முதலிய எவ்வித விஷ ஜெந்துக்கள் தீண்டினாலும், டைரக்ஷனில் சொன்ன பிரகாரம் உபயோகித்தால் குணமடையலாம். மேற் சொன்னவைகளுக்கு உபயோகித்து குணமில்லாவிடில், பணம் வாபீஸ் செய்து விடப்படும்.

இந்த சர்வதேள் விஷ சஞ்சீவியைக் கைப்பற்றுங்கள். இவ்விஷ சஞ்சீவி ஒவ்வொரு வீட்டிலும் அவசியம் இருக்க வேண்டியது. ஏனென்றால், ஓர் மனிதனை இரவில் 12மணிக்கு நித்திரையில் விஷந் தீண்டி விட்டால், அம்மனிதன்எவ்வளவோ அவஸ்தைப்பட அநேகமருந்துகளையும் மந்திரங்களையும் உபயோகித்தும் பயன்படாமற் போகிறதல்லவா? அதற்காக இவ் விஷ சஞ்சீவி ஒவ்வொரு இல்லத்திலும் அவசியம் இருக்க வேண்டியது. அடியிற்கண்ட விலாசத்துக்கு எழுதிப் பெற்றுக் கொள்ளலாம்.

விலை பாக்கட் 1-க்கு 0—8—0
விலை பாக்கட்12-க்கு 5—0—0

விலாசம்

**வி. வ. எஸ். பாணி,**
**3, இருள்ப்பன் வீதி,**
மதராஸ்.

ஸ்ரீ கிருஷ்ண விலாஸம் பிரஸ், திருமங்கலம்.

உ

பொங்கும் மங்களம் எங்கும் தங்குக.

# விவேகோதயம்.

மதுரை மாணவர் செந்தமிழ்ச் சங்கத்தினின்று
வெளிவரும்
மாதாந்தத் தமிழ்ப் பத்திரிகை.

“அறிவுடையார், எல்லாம் உடையார்; அறிவிலார்
என்னுடைய ரேனும் இலர்”—திருக்குறள்.

| தொகுதி ௨. | பிங்கள௵ ஐப்பசி௴<br>1917௵ அக்டோபர்௴ | பகுதி ௬. |
| --- | --- | --- |

## புதல்வர் கடமை.



(231-ஆம் பக்கத் தொடர்ச்சி.

‘ஏவா மக்கள் மூவா மருந்து’ என்பதைப் பற்றி வெகு பொறுமையுடன் கேட்டுவந்த நல்லோர்களே! இப்பொழுது நான் அறிவிக்க எண்ணியுள்ள விஷயத்தையும் சிறிது கவனமாய்க் கேளுங்கள்:

ஒவ்வொருவர்க்கும் இருவகைக் கடமைகள் உண்டு: ஒன்று பிறப்பினால் ஏற்பட்டது. மற்றொன்று பதவியினால் ஏற்பட்டது. இவ் விருவகைக் கடமைகளும் சிற் சில சமயங்களில் முரண்படுவதுண்டு. அங்ஙனம் முரண்படுமிடத்து இவைகளில் அதிமுக்கிய கடமை எது என நன்காய்ந்து, அதனையே செய்து முடித்தல் வேண்டும். இங்ஙனம் செய்வதே ஆன்றோர்க்கு அழகு. இவ்விஷயத்தையும் சிற்சில உதாரணங்களால் விளக்குவாம்.

பாண்டி வளநாடும் சோழதேசமும் விஜய நகராதிபதியாகிய கிருஷ்ணதேவராயலு என்பவனது ஆட்சிக் குட்பட்டிருந்த காலத்தில், 1559௵, சந்திரசேகர பாண்டியனை, வீரசேகர சோழன் வென்று, அவனது நாட்டையும் கைப்பற்றினான். சந்திரசேகரன் விஜயநகர மன்னன்பாற் சரண்புகுந்து, தன் நாட்டை மீண்டும்பெற அவனது உதவி வேண்டினான். தன் கீழ் அடங்கிய சிற்றரசனா யிருந்தும், வீரசேகரன் தனது உத்தரவின்றி மதுரையைக் கைப்பற்றிய

செய்தி கேட்டதும், கிருஷ்ணதேவனுக்கு, வீரசேகரன்மீது, அடங்கா வெகுளியும் வெறுப்பும் விளைந்தன. உடனே அவன் சந்திரசேகரனுக்கு அபயம் அளித்து, சோழனை வென்று, பாண்டியனுக்கு முடிசூட்டி வருமாறு, நாகமநாயகன் என்பவனை ஒருவீர சைநியத்துடன் அனுப்பினன். நாகமன் அதிதீரன்; சுத்தவீரன்; அரசனுக்காக அநேக இடங்களிற் பொருது ஜயசீலனுத் திரும்பியவன். ஆகவே, வீரசேகரனை வெல்ல அரசன் இவனை அனுப்பியதில் வியப்பின்றே? நாகமன் பாண்டியனுடன்சென்று, சோழனுடன் கடும்போர்செய்து, அவனைக் கொன்று, அவனது நாட்டையும் கிருஷ்ணதேவனது வசமாக்கி, மதுரைசென்று, சந்திரசேகரற்கு முடிசூட்டினன். ஆயினும் சின்னாட்களில் அவன் தீயர் சிலரது துர்ப்போதனைக் கிணங்கித் தருமநெறி தவறி, நயவஞ்சகத்தால் சேனையைத் தன் வசப்படுத்தி, சந்திரசேகரனைச் சிறையிட்டுப் பாண்டியாதிபதியாக் ஆளத் தொடங்கினன். இச்செய்தி கிருஷ்ண தேவனுக்கு எட்டவே, அவன் அடங்காச் சினம் கொண்டு போர்வீரர் கொண்ட ஓர் பெருஞ் சபை கூட்டி, நாகமனது நயவஞ்சகத்தையும் நம்பிக்கை மோசத்தையும் நவின்று, சபையை நோக்கி "வீரர்காள்!

இதுகா றும்யான், எனக்கிடர் என்றும்
இழைப்பவர் துருக்கர்என் றெண்ணி யிருந்தேன்.
காலக் கொடுமையோ? ஞாலக் கொடுமையோ?
ஏதென அறிகிலேன், கோதறு குணத்துநம்
வீரநாகமனும் விரோதி ஆனது!
நன்றி கொன்றஅந் நாகமன் றனது
தலையைத் துமித்துத் தருபவர் இலரா?

இந்த ராஜத் துரோகியை உயிருடனோ, உயிரில்லாமலோ, என்முன் கொணர்பவர், தக்க உதவியும் வெகுமதியும் பெறுவர்" என்று கன ஆத்திரத்துடன் கூறினன். ஆயினும், அதிவீரனும் அசகாய சூரனுமான நாகமனை எதிர்க்கப் புறப்பட எவரும் துணிந்து முன் போந்திலர். இதுகண்டு அரசன், ஏக்கமும் சஞ்சலமும் மேலிட்டுத் தியங்கி நின்றான். அச்சமயம் எழுந்தனன் ஒருவன். ஏதோ சிந்தித்தனன் சிறிது நேரம். உட்கார்ந்தனன் பிறகு. மீண்டும் எழ ஆரம்பித்தான். கண்டனன் இவனைக் கிருஷ்ணதேவராயன். சிறிது முகவாட்டந் தவிர்ந்து அவனை நோக்கி,

"நற்குண விசுவ நாத!நீ இன்று
புந்தி மயங்கிச் சிந்தை மாழ்கலென்?
ஓந்திபோல் மாறுதல் உற்றதென் உன்முகம்?
பற்பல் யோசனை பண்ணினை போலும்.
எழுந்தனை; இருந்தனை. எழத்தொடங் கினைஎன்?
என்னைச் சரண்புகு தென்னவனைச்சிறை
நரகமன் செய்தது ஞாயமா? நவிலாய்.
நீயெனும் ஒருசிறி தாயினும்தாழா(து)
ஆற்றற் படையுடன் அணிவகுத் தேகி,
அவனுடை மறத்தொழில் அறவொழித் தவனைச்
சிறைசெய்(து) என்அடி சேர்க்கமாட் டுவையா?
மன்னவன் ஆணையை மறுத்திடாய் நீஎனும்
உறுதியால் உனக்கிது உரைக்க லுற்றனன்.
என்கட் டளைஇறை வேற்றுவை யோ?" என

இரங்கிக் கேட்டனன். யாரைப் பார்த்து இங்ஙனம் கிருஷ்ணதேவராயலு கேட்டனன்? தனக்கு எவன் நம்பிக்கைத் துரோகம் செய்தானோ, அவனது ஏக புத்திரனையே! அரசனுக்கு இவனிடத்துள்ள நம்பிக்கையைப் பாருங்கள்!

அரசன் இவ்வாறு கூறலும், விசுவநாதன் துயரமும் ஆறுதலும் மாறி மாறித் தோன்ற, அரசனை நோக்கி,

என்னவென் றுரைப்பேன்! இறைவனே! எனது
தந்தைசெய் ததெலாம் தவ்றே. ஆயினும்
வேந்தர்கள் வேந்தே! 'வெம்போர்க் களத்தினில்
படுத்துவ தோநம்மைப் பயந்த தந்தையை'?
என்றுமோர் எண்ணம் எழுந்ததென் மனத்தில்.
சிறிது நேரம் சென்றதும், 'ஆ! ஆ!
மாப்பெருந் தந்தை மன்னவன் அன்றோ?
ஆதலின் அவனுடை ஆணையை ஏற்பதே
ஆன்ற நெறியெனத் தோன்றிய(து). இதனால்
மயக்கமும் மறைந்தது; தியக்கமும் தீர்ந்தது.
வென்றிவே லோய்!நீ விளம்பிய யாவையும்
ஓர்ந்தேன். சரியெனத் தேர்ந்தேன். எங்கள்
காவல! நினது கட்டளைப் படியே
எந்தையைக் கொணர இன்றே செல்கிறேன்.
மனக்கவல் ஒழித்தி மன்னநீ" என்றலும்,
அப்பொழு தங்குளோர் அரசனை நோக்கி,
"அந்நா கமன்நம் அரும்பெரும் சேனையில்
ஒருபெரும் பகுதி யோடுஞ் சென்றங்(கு)

அதைவசப் படுத்தி ஆள்கிருன் மதுரை.
விஷத்தி னின்றும் வேறெதும் தோன்றுமோ?
அவன்மக ளுகிய இவனும் மீந்துள
நமது சேனையில் நல்லவை கொண்டு
மதுரைப் கவற்றை வலிமிகு தாதைபால்
விடுத்தவன் றனைப்பலப் படுத்தின்,என் செய்வோம்?''

'என்னக் கலங்கிக் கூறினர். ராஜவிசுவாசமும் நடுவுநிலைமையும், செய்கடன் செய்யும் திறமையும் வாய்ந்த பிதுர்பக்த சிரோமணி யான விசுவநாதன், மனம் புழுங்கி,

"அரசர்கள் பெரும! அவையி னுள் ளோர்களே!
ஏனே என்மீது இத்துணை ஐயம்!
தந்தையைத் தெய்வமாத் தாங்குவோன் தான்யான்.
இதிற்சந்தேகமே இல்லை. ஆயினும்,
அறநெறி யாற்றஎன் அரசன தாணையைச்
சிரமேற் கொண்டனன் சிறியேன். அதனுல்
இறைவனு ணையைநிறைவேற்றியே தீர்வேன்.
இல்லையேல் உயிருடன் இவண்திரும் பேன்யான்.
எல்லாம் வல்ல ஈசனும் எனக்குத்
திருவருள் புரிவன் என்பது திண்ணம்"

'என்று மெய்ப்பாடு தோன்றப் பேசவே, அனைவர்க்கும் அவநம் பிக்கை போய் விசுவநாதனிடம் விசுவாசமே பிறந்தது. அனைவரும் விசுவநாதனை ஜயத்துடன் திரும்புமாறு வாழ்த்தி அனுப்பினர். தந் தைமீது படையெடுத்துச் செல்லல் தகாது என்பதற்குப் பல நியாயங் கள் சொல்லி விசுவநாதனது தாய் அவனை மதுரை செல்ல வொட் டாது தடுக்கப் பகீரதப் பிரயத்தனம் செய்தனள். அவள், விசுவநா தன் நாகமனுக்குப் பின் பாண்டிநாட் டதிபதி யாவதால் உண்டா கும் பல்விதச் சிறப்புக்களையும், நாகமனேடு எதிர்ப்பதால் விளையக் கூடிய தீங்குகளையும் பின் வருமாறு கூறினள்:—

"மகக்குறை அகற்றிய தகப்பெரு நல்லோய்!
தனைஈன் றெடுத்த தாதை யுடன்போர்
தொடுப்பவர் உண்டோ? தொடுப்பதும் நீதியோ?
நன்றுநன்(று).உன் மதி சென்றவா றென்னே?
அரசச் செல்வமும் ஆக்கமும் அடைவது
எளிதெ்ன எண்ணேல். ஏனே தியக்கம்?
உனது தந்தையோ உன்னிலும் அறிஞன்.
உலகியல் முற்றும் உன்னிலும் உணர்ந்தவன்.
அமிழ்தினும் இனியசெந் தமிழ்மணங் கமழ்தரு
பாண்டிநா(டு) அவன்கைப் பற்றிய தாலே

நாளை நீயு(ம்)அந் நாட்டதி பதியாய்க்
காவலர் பாவலர் மேவலர் முதலிய
யாவரும் இறைஞ்சும் மேவரும் சிறப்புப்
பெறுபவனாகப் பிறங்குவோ னாயினை.
யானும், இனிஇம் மாநிலம் புரக்கும்
'மன்னன் தாய்' எனப் பன்னப் பெறுவேன்.
உன்பெரு மதிஎங் குற்றதனை வீர!
நீதியின் பொருட்டெனும் நீநின் தாதையை
எதிர்த்துப் பொருதலால் ஏதமே விளையும்.
ஈதுநன் கறிதி; தாதையை இழந்து
அறுதலி யாக்கிநின் அன்னையை வருந்தச்
செய்வதோ அறநெறி? சிந்தியாய் மகனே!
கணவனை இழந்த காரிகை யார்க்கு
காட்டுவ துண்டுகொல்? வேட்டது தவிர்தி.
'தாய்சொற் றுறந்தால் வாசக மில்லை.'
என்பதை அறிந்தநிற் கென்யான் புகல்வது?
ஆதலின் நீஉன் தாதையோ டொத்து
வழுதிநா டாளும் வழியையே நாடுக."

(இன்னும் வரும்.)

பத்திராதிபர்.

---

## விநோதக் கூற்று.



தண்ணீர் ஏற்கனவே இருந்த ஒரு பெரிய செம்பில் வேறு செம்புப் பாலை நுரையுடன் ஊற்றியபடியும், தன் மகனை நோக்கி,

**ராக்காயி:**—அட பலே! இருளா! நான் இப்போ என்ன செஞ்சேன், தெரியுமா?

**இருளன்:**—ஆத்தாடி! என்ன இப்படிக் கேக்கறே? பாலிலே தண்ணி கலந்தே. ஆமா ஆத்தா! தண்ணி கலக்கறதில்லேன்னு நேத்தி எசமான் வீட்டுச் சேவுகருக்கு சத்தயம் பண்ணிக் குடுத்தியே.

**ராக்காயி:**—போடா பலே! பாலிலேயா தண்ணி ஊத்தினேன்? தண்ணீலில்லே பாலெக் கலந்தேன். சேவுகரு வந்து இன்னிக்குக் கேட்டா, "சாமி சாக்கியா பாலுலே தண்ணியே ஊத்தல்லே" இன்னு ஒந் தலேலேயும் அடிப்பேன். அவுக வந்தா உளறிடாதே மூளி!

வேங்கடராவ்.

---

உ

ஸ்ரீ ஸுப்ரஹ்மண்யாய நம:



# ஷஷ்டி பஞ்சகம்.

பொற்சிகியில் ஏறிப் புலவன் வருகின்றான்
சற்சனர்காள்! நீவிர் தரிசிக்க — நற்சமயம்
கண்டுவப்பீர். பாடிக் களிப்பீர், கிரௌஞ்சிரமேற்
கொண்டவன்பால் நெஞ்சங் குழைந்து.

இந்நாளே நன்னாள். இறைவன் திருநாள். மற்
றெந்நாளும் இந்நாளுக் கீடில்லை — சொன்னேன்
சுரர்க்கபயம் ஈந்த சுடர்வடிவேற் கந்தன்
நரர்க்கருள வந்துவந்த நாள்.

வள்ளியம்மை தன்னை மருவிச் சுகம்பருகத்
தெள்ளியதேன் என்னத் திகழ்வுற்றுப் — புள்ளிமயில்
ஏறிவரும் எந்தை இரப்பார்க்(கு) அளிப்பதற்கென்(று)
ஆறிருகை கொண்டான் அறிந்து.

சிட்டரநுட் டிக்கும் திருநோன் பெனக்கந்தர்
சட்டியையே யெக்கலையுஞ் சாற்றக்கண்(டு) — இட்டசித்தி
எல்லாங் கொடுப்ப திதுவென்(று) அறிந்தறிந்திங்
கெல்லாருங் கொண்டார் இசைந்து.

சூரகத்தைச் சுட்ட துரைவருகின் றான்பவனி.
பாரகத்தீர்! எல்லோரும் பாடுங்கள் — ஏரகத்தில்
தந்தைக்குச் சற்குருவாய்த் தண்புகழைத் தான்வளர்க்கும்
கந்தனருட் கோலமதைக் கண்டு.

குமரதாசன்.

## சாணக்ய ஸாஹஸம் என்னும்
# சந்திரகுப்த சரித்திரம்.



### பதினோராவது அத்தியாயம்.
### ராக்ஷஸன் மனைவி மக்களை மறைத்து வைத்தல்.

அநந்தரம், அமாத்திய ராக்ஷஸன் "இப்பொழுது பர்வத ராஜனுடைய சேனை நகரைச் சூழ்ந்து காவல் செய்துகொண்டிருக்கிறது. நான் நந்தர்களுக்குப் பரம மித்திரனாயும், தனக்கு வைரியாயுமிருந்ததினால், சந்திரகுப்தன் என்னை என்ன செய்வானோ! இப்பொழுது இருக்கும் காலபலம், மித்திரர்களையும் சத்துருக்களாக்கச் செய்யத் தடையில்லை. நவநந்தர்களைக் கும்பிட்ட இதே கைகளால் வேறு எவனையேனும் 'பிரபு' என்று கும்பிடுவேனாகில், என்னுடைய பௌருஷம், ஸாஹஸம், ஸ்வாமி பக்தி, இவைகளெல்லாம் வீணேயாகும். ஆகையால் நந்தர்களுக்குச் சத்துருவான இச் சந்திரகுப்தனை எவ்வித உபாயத்தாலேனும், சங்கரித்து, விண்ணுலகெய்திய பிரபுக்களின் ஆத்மாவுக்கு ஸந்தோஷத்தையும், திருப்தியையும் விளைவிப்பேனே அல்லாது, வீண் காலக்ஷேபம் செய்வேனோ? இதற்குரிய காரியங்களில் நான் பிரவேசிக்குமுன், எனது மனைவி மக்களுக்குச் சத்துருக்களால் உபத்திரவம் ஏற்படாதிருக்கும்படி செய்ய வேண்டியது அவசியம்." என்று தனக்குள் நிச்சயித்தான்.

பிறகு அவன் ஓர் ரஹஸ்யமான விடத்தில் தனக்குப் பிரிய மித்திரனாகிய சந்தனதாஸன் என்ற வர்த்தகனை வரவழைத்து, அவனை நோக்கி, "ஐயா! மித்திர! நந்த வைரியான சந்திரகுப்தனை எவ்வித உபாயத்திலேனும் சங்கரித்து, விருத்தனான ஸர்வார்த்த ஸித்திக்கு ஒரு ஸ்வீகார புத்திரனை ஏற்படுத்தி, அச்சிறுவனுக்கு இந்த நந்த ராஜ்யத்தை அளித்து, அவர்களது வம்சம் க்ஷீணிக்காமல் இருக்கச் செய்வதே என்னுடைய கடமையும் தீர்மானமுமாகும். இவைகளை யெல்லாம் நான் இங்கிருந்து செய்தல் சரியன்று. ஆகையால் நான் இப்பொழுது இந்நகரை விட்டு வெளியில் செல்லப் போகிறேன்; நான் திரும்பி வருமளவும் எனது பத்தினியையும் புத்திரர்களையும், சத்துருக்களால் உபத்திரவம் ஏற்படாது நீ காப்பாற்றிவர வேண்டும். அவர்கள் உன்னிடமிருப்பது ஒருவருக்குமே தெரியக்கூடாது. இவ் வஸ்துக்களையும், திரவியங்களையும் வைத்துக் கொண்டு அவர்களைக் காப்பாற்றிவா" என்று சொல்லித் தன் வீட்டிலுள்ள எல்லோரையும் சந்தனதாஸனுடன் அனுப்பி விட்டான்.

---

## பன்னிரண்டாவது அத்தியாயம்.
## விஷ கன்னிகை.



ராக்ஷஸன், பிறகு தான் சத்துருவை வெல்லுவதற்குரிய கபட உபாயங்களைப் பலவிதத்திலும் நினைத்துப் பார்த்தான். "விஷ கன்னிகையைக் கொண்டு வேலை செய்வோம். இதனால் காரியம் ஜயமாய் விடும் பக்ஷத்தில் வேறு உபாயங்கள் ஏனோ?" என்று நினைத்து, அவளை வரவழைத்தான்.

இவ் விஷகன்னிகையின் வரலாறு இது:—ஏதாவது ஒரு ஸமயம், ஸாம, தான, பேத, தண்டம் என்கிற நான்கு உபாயங்களாலும் ஜயிக்க முடியாத அதி விரோதமுள்ள சத்துரு நெருங்கிவிடும் பட்சத்தில், அவனை ஸமாதானம் செய்து கொள்ளும் காணிக்கையாக ராக்ஷஸன் ஒரு சூழ்ச்சி செய்திருந்தான்: சமுத்திரத்திலிருக்கும் விஷ மச்சங்களை, கர்ப்பத்திலிருக்கும்போது முதற் கொண்டே தன் ஆகாரமாகப் பெறும்படி ஊட்டப்பெற்ற ஓர் பெண்குழந்தைக்கு, பாதரஸம் முதலியவைகளை வார்த்து, அதை வளர்ப்பித்தான். ஒரு வயது முதல் அக்குழந்தைக்கு விஷத்தை மேன்மேலும் சிறிது சிறிதாகத் தேகத்திலேற்றி வந்தான். வயதாக ஆக, அதிக விஷம் சேர்த்துப் பனிரண்டு வயதுவரை அக்குழந்தையை வளர்த்து வந்தான். 'அப்பெண்ணின் தேகத்தில் பட்ட ஈ, எறும்பு, கொசுகுகளும் விஷவேகத்தால் மாளும்' என்றால் அதிகம் சொல்வானேன்? அதி சௌந்தரியத்துடன் விளங்கும் அக் கன்னிகைக்கு; சங்கீதம், நாட்டியம், முதலிய வித்தைகளைப் பயிற்றுவித்தான். அவளும் கண்டோர் காமுறும்படி தேஜோமயமாய் விளங்கினாள். 'இவள் தக்க ஸமயத்தில் உபயோகப்படுவாள்' என்று, ராக்ஷஸன் அவளை ஒரு தனிக் கிருஹத்தில் வைத்துப் போஷித்து வந்தான். அவள் யௌவன பருவம் அடைந்தாள். இவளைக் கொண்டேதான் சந்திரகுப்தனை வெல்ல எண்ணினான் ராக்ஷஸன்.

இவ் விஷகன்னிகையை வரவழைத்து, அவளுக்கு விலைமதிக்க முடியாத ஆடையாபரணங்களால் பாதாதி கேசபரியந்தம் அலங்கரித்து, தனக்கு மிக நம்பிக்கையுள்ள ஜீவஸித்தி யென்ற பௌத்த ஸந்நியாஸியை வரவழைத்து, "ஐயா! ஜீவஸித்தியே! இக் கன்னிகை யார் தெரியுமா? முன்பு ஒரு சமயம் சிறைப்பிடிக்கப் பட்ட வல்லபராஜனுடைய ஏகபுத்திரி. இவள் மிகவும் கட்டழகியா யிருப்பது பற்றி, ஜேஷ்ட நந்தனுக்குப் பிரிய பத்தினியாகச் செய்ய வேண்டுமென்ற ஆசையால், குழந்தை முதல் வெகு சீரும் சிறப்புமாக இவளை வளர்த்து வந்தேன். ஈசுவர சங்கற்பம் வேறு விதமாய் முடிந்ததால், நவ யௌவனம் வாய்ந்த இத் தருணீமணி, சந்

திரகுப்தனுக்காவது பயன்பட வேண்டுமென்பது, எனது அந்தரங்கமான எண்ணம். ஆயினும், 'கேவலம் ஒரு ஸ்திரீ மூலமாக சந்திரகுப்தனுடைய தயவை ராக்ஷஸன் அடைந்தான்' என்ற பழிச் சொல் உண்டாவதில் எனக்கு இஷ்டமில்லை. இவள் ராஜ யோக்யமாக என்னால் வளர்க்கப்பட்டவளானாலும், இதை நீ வெளிக் காட்டலாகாது. உனது சிஷ்யை என்று சொல்லி, நீயாகவே சந்திர குப்தனுக்கு ஒப்புவிப்பதாக ஒப்புவித்து, இந்தக் கோமளாங்கியுடன் அவனை இன்புற்று வாழச் செய்வாயாகில்,என் மனோபீஷ்டம் நிறைவேறிவிடத் தடையில்லை. "நான் ஸந்யாஸி யாயிற்றே! எனக்கு இவ்வியாபாரம் கண்ணியக் குறைவு. ஆனதுபற்றி நான் மாட்டேன்" என்று நீ மறுக்கக் கூடாது. வேறு யாருடனாவது இவளை அனுப்பினால், அவர்கள் இவளுடைய ஸௌந்தர்யத்தைக் கண்டு மோஹித்துத் தாமே அபகரிக்க எண்ணுவார்கள். பின்னும், இவ்விதம் சாதுர்யமாய்க் காரியத்தை நடத்தி உடன் படுத்தக் கூடிய சாமர்த்தியம் உனக்கேயன்றி வேறொருவருக்கும் கிடையாது. எப்படியாவது இந் நாரீமணியின் தேக ஸம்பந்தம் சற்றாயினும் உண்டானால், ஸஹிக்கமுடியாதபடி என் இருதயத்தில் தவிதவிப்பை யுண்டாக்கிக் கொண்டிருக்கும், நவநந்த நாசத்தினால் எழும் துக்கமானது,தணிந்து விடும். நீ அதுவரை இவளுக்கு ஆகாரமளித்துக் காப்பாற்றித் தக்க ஸமயத்தில் சந்திரகுப்தனிடம் ஒப்புவித்துவிடு" என்று ராக்ஷஸன் சொன்னான்.

அதற்கு க்ஷபணகன், "ஐயா! ராக்ஷஸ! இப்பேர்ப்பட்ட ஸமயத்தில் நான் உன் வார்த்தையை மறுப்பவன் அல்லன். இந்த உபகாரம் செய்யாவிடில் நான் உனது மித்திரன் ஆவேனோ? இதென்ன பிரமாதமான காரியம்! என் புத்தி சக்தி சாமர்த்தியங்களை யெல்லாம் செலவழித்து, எவ்விதத்திலேனும் சந்திரகுப்தனை வசப்படுத்தி, இவளுடன் பிரியமாய் நடந்து சுகிக்குமாறு செய்து விடுகிறேன். இது பற்றி ஸந்தேகியாதே. ஆனால், ஒரு ஸம்சயம், எல்லாம் வல்ல சாணக்யன், "இவள் ராக்ஷஸனால் வளர்க்கப்பட்டவளாகையால் நாம் ஏற்றுக் கொள்ளக் கூடாது" என்று சொல்லும் வார்த்தையை யனுசரித்துச் சந்திரகுப்தன் இவளை அங்கீகரிக்காவிடில், உனது சங்கற்பம் வீணாய் விடுமன்றோ? அப்பொழுதேனும் சந்திரகுப்தனைச் சரணமடையப் போகிறாயோ, அல்லது இன்னம் வேறு யோசனைகளும் பிரயத்தினங்களும் செய்யப் போகிறாயோ?" என்று கேட்டான்.

அதற்கு ராக்ஷஸன் 'க்ஷபணக! உன்னிடம் மறைத்துப் பேசவேணோ? இவ்விதம் உன்னைக்கொண்டு செய்யப்பட்ட ஸாம தானங்களுக்குச் சந்திரகுப்தன் வசப்படாவிடில் பேத உபாயத்தைக் கைக்கொள்வேன். சாணக்யன் விழிப்பாளியானதாலும், விரக்தனாயிருப்

பதாலும், சாணக்ய சந்திரகுப்தர்களுக்குப் பேதமுண்டாக்க முடியாது போனால், தண்டோபாயத்தை அநுஸரிக்க வேண்டியதேயாகும். நந்தர்களின் பொக்கிஷ ரகஸியமெல்லாம் நான் அறிந்தவன். ஒரு பக்கத்திலிருக்கும் புதைபொருளை எடுத்துச் செலவழிப்பேனாகில் பர்வதேசனைப்போல் எவ்வளவு அரசர்கள் வேண்டுமானாலும் எனக்கு ஸ்வாதீனப்படுவார்கள். இந்தப் பர்வதேசனும் எனக்கு முன்பு மித்திரனாகையால், அவனிடம் சென்றால், நான் முன்பு செய்திருக்கும் உபகாரத்தை நினைத்துத் தன் பங்கிற்குக் கிடைக்கும் ராஜ்யத்திற்கு என்னையே அதிபதியாக்கிவிடத் தடையில்லை. பாதி ராஜ்யமும் என் வசத்திலிருந்து, பருவதேசனைப் போன்ற அரசர்களும் எனக்குச் சகாயமாக இருக்கும்போது, மீதிப் பாதிராஜ்யத்திலிருக்கும் சந்திரகுப்தனுக்குப் பட்டம் நிலைக்குமா?'' இவைகளெல்லாம் உன் மனதிலேயே இருக்கட்டும்.'' உன்னால் செய்யப்படும் மத்யஸ்தம் பலிக்காவிடில் பிறகு இந்த ஆலோசனை'' என்று சொல்லி அவனிடம் ராக்ஷஸன் அக் கன்னிகையை ஒப்புவித்து அனுப்பினான்.

ஜீவஸித்தி ராக்ஷஸன் சொல்லிய பிரகாரம் அவளை அழைத்து வரும்போது, தனக்குள், "ராக்ஷஸன் என்னிடம் சொல்லி வந்த வார்த்தைகளில், "எவ்விதத்திலேனும் இவ்வழகியின் தேக ஸம்பந்தம் கொஞ்சமாகிலும் சந்திரகுப்தனுக்கு ஏற்படுமாகில் என் மனோபீஷ்டம் நிறைவேறிவிடும்'' என்று எனக்கு ஒளித்துச் சொன்னதால், இக் கன்னிகையிடம் ஏதோ விசேஷம் இருக்கவேண்டும். ஸாமமும் தானமும் பலியாவிட்டால், பிறகு பேத, தண்டங்கள் என்ற உபாயங்களால் சந்திரகுப்தனை வெல்லுவதாகவும் சொல்கிறான். நமது சாணக்யர் இருக்கும்வரை இவனைப்போல் நூறு ராக்ஷஸர்கள் இருந்தாலும் ஒன்றும் நடவாது. ஆகிலும், இவளால் சந்திரகுப்தனுக்கு நேரிடக்கூடும் ஆபத்து இன்ன விதமென்று அறிய முடியவில்லை. இவளுடைய ரூப சௌந்தரியங்களைக் கண்டால் முற்றும் உணர்ந்து பற்றை விலக்கிய மெய்ஞ்ஞானிகளும் காம பரவசமடைவார்கள். இவ்விடமிருக்கும் குணதோஷம் இன்னதென்று எவ்விதத்திலேனும் அறிந்துகொண்டபின்பு, மற்றவைகளை ஆலோசிக்க வேண்டும்'' என்று தீர்மானித்து, அப் பெண்மணியுடன் தன திருப்பி

டம் சேர்ந்து, அவளை ஓரிட முட்காரச்செய்து, சிறிது நேரங் கழித்துச் 'சாப்பிடு' என்று கூறி அன்னமிட்டான். அவளும் சாப்பிட்டு அதிகமாக விருக்கும் சாதத்தை வெளியில் எறிந்து விட்டுக் கைசுழுவிக்கொண்டு வந்தாள். அப்போது இவள் எறிந்த எச்சில் அன்னத்தை ஒரு பூனை தின்றது. உடனே அது கீழே விழுந்து உயிரிழந்தது. அதுகண்டு, ஜீவஸித்தி, "ஓஹோ! இவள் விஷகன்னிகை பேராலும்! ராக்ஷஸன் சந்திரகுப்தனை நாசம் செய்யும் நிமித்தம் என்னிடமொரு விதமாகச் சொல்லி இவளை அனுப்பி இருக்கிறான். நல்லதிருக்கட்டும். இவனை விட்டேனு? இந்த அபிப்பிராயங்கள் எல்லாவற்றையும் நன்கு விளங்க நமது சாணக்யருக்குச் சாடையாய்த் தெரியப்படுத்த வேண்டும்" என்று நிச்சயித்து அதற்கேற்ற ஸமயத்தை எதிர் பார்த்துக் கொண்டிருந்தான்.

(இன்னும்வரும்.)

வி. பாலம்மாள்.

---

## சற்குணவல்லி.

(236-ஆம் பக்கத் தொடர்ச்சி)

(சிறுவர்க்காகும் கதை)

---

நெடுந்தூரம் காட்டில் நடந்துசென்ற சற்குணவல்லி, கடைசியில் ஒரு குடிசையைக் கண்டனள். அதனுள் எட்டிப் பார்த்து, அங்கே ஒருவருமில்லாமலிருக்கக்கண்டு சந்தோஷித்து, அதிலேயே தங்கள் காலத்தைக் கழிக்கலாமென்றெண்ணி அங்குத் தங்கினாள். அந்த மான்குட்டிக்கு படுக்கை முதலியன தயார் செய்து வைத்து விட்டுத்தான், சற்குணவல்லி உறங்குவாள். அவள் ஒவ்வொரு நாளும் வெளியேபோய், அதற்கும் தனக்கும் உணவு சம்பாதித்து வருவாள். அம் மான்குட்டி இவள் கையினின்றும் புல் தின்னும். துள்ளிக் குதித்து அது விளையாடுவதைக் கண்டு, மகிழ்ந்து தன் காலத்தைப் போக்கினாள் சற்குணவல்லி. இந்த ஸ்திதியில் இவ்வளவு சந்தோஷமாயிருக்கும் இவள், பையன் பழைய உருவுடனிருந்திருந்தால் எவ்வளவு சந்தோஷமாயிருப்பள்! யோசித்துப் பாருங்கள்.

இப்படி இவர்கள் வசித்து வருகையில், ஒருநாள் ஒரு ராஜகுமாரன் வேட்டையாட அக் காட்டிற்கு வந்து சேர்ந்தான். அப்பொழுது வேடர்களின் கூச்சல்களையும், நாய்களின் சப்தத்தையும் பறையோசையையும் மான்குட்டி கேட்டது. கேட்டவுடன் அங்கேபோய் 'என்ன நடக்கிறது' என்று பார்க்கவேண்டுமென்ற ஆசை அதற்கு உண்டாயது. உண்டாகவே, இன்னதெனப் பார்த்து வர அது அச் சிறுமியிடம் அனுமதி கொடுக்குமாறு பலமுறை வேண்டி நின்றது. இவளும் கடைசியில் அனுமதி கொடுத்துவிட்டாள். அவள் அதைப் பார்த்து, "நல்லது. நீ போ. ஆனால் இருட்டுமுன் திரும்பி வந்துவிட வேண்டும். நாய், வேடர் முதலானோர் பயத்துக்காக நான் கதவை மூடியே வைக்கவேண்டும். ஆகையால், நீ வந்தவுடன் உன் குளம்பால் கதவைத் தட்டி 'அக்கா! கதவைத்திற!' என்று சொல்லவேண்டும்; அது உன்குரலாய் இருந்தால் நானறிந்து கொள்வேன். ஆனால் நீ பேசாமலிருந்தால், நான் கதவைத்திறக்கவே மாட்டேன்" என்றாள்.

அம் மான்குட்டி சுயேச்சையாய் தன்னை விட்டுவிட்டமைக்குச் சந்தோஷித்து, துள்ளிக் குதித்துக்கொண்டு வெளியே ஓடிற்று. வெகு தூரம் அது சென்றதும், அங்கு வேட்டையாடிக்கொண்டிருந்த அரசகுமாரனும் வேடர்களும் அதைக்கண்டு துரத்த ஆரம்பித்தனர். உடனே அது அவர்கள் கைக்குப்பிடிபடாமல் வேகமாய் ஓடி, வேடர்கள் கண்ணுக்குப் புலப்படாமல் புதர்களுள் மறைந்திருந்து இருட்டியவுடன் குடிசைக்கு வந்து சேர்ந்தது. சேர்ந்ததும், அது தன் தமக்கை கூறியதுபோல, குளம்பால் கதவைத் தட்டி அவளை அழைத்தது. சிறுமி கதவைத் திறந்து உள்ளே அதை அழைத்துச் சென்று உணவளித்து அதன் பக்கத்தில் படுத்துக்கொண்டாள். "இம்மான்குட்டி மறுபடியும் வெளியே போக வேண்டுமென்று ஆசைப்பட்டால் அதற்கு என்ன தீங்குகள் நேரிடுமோ? இதற்கு என் செய்யலா" மென்று நெடுநேரம் ஆலோசனை செய்தனள். பிறகு களைப்புமேலீட்டால் தூங்கி விட்டாள் அவள்.

அரசகுமாரனும் அவன் ஆட்களும் மறுநாட்காலையிலும் வேட்டையாட ஆரம்பித்தார்கள். இவர்கள் சப்தத்தைக் கேட்டவுடன் மான்குட்டிக்கு மறுபடியும் அங்கே போகவேண்டுமென்ற எண்ணம் உதித்தது. சற்குணவல்லியும் அதன் விருப்பிற் கிணங்கிப் போக உத்தரவு

அளித்து விட்டாள். ஓரே துள்ளாய்த் துள்ளிக் குதித்துக் காட்டினுட் பாய்ந்தது மான்குட்டி. அரசகுமாரனும் வேடர்களும் அன்றும் அதனைக்கண்டு அதைத்துரத்திச் சென்றனர். ஆயினும் அம்மான் கன்று, வாயுவேகம், மனோவேகமாய் ஓடியபடியால், அது இவர்கள் கையில் அகப்படவேயில்லை. என்றாலும், ஒருவேடன் ஓர் அம்பெய்து அதன்காலைக் காயப்படுத்தி விட்டான். அதனால் அம் மான்கன்று அன்றுநெடுநேரங் கழித்து வீடுவந்து சேர்ந்தது. சற்குணவல்லியோ, தன் அருமைத் தம்பிக்கு என்ன அபாயம் நேரிட்டதோ என்று மனங்கலங்கித் துக்கப்பட்டுக் கொண்டிருந்தாள்.

மான்குட்டியை எய்த வேடன், இது நொண்டியாய் விட்டதென்று அறிந்து அதன்பின்னால தொடர்ந்து சென்றான். குடிசையை அடைந்தவுடன் அது வழக்கம் போல் கதவைத் தட்டிக் கூப்பிட, சற்குணவல்லி கதவைத் திறந்து உள்ளே அழைத்துச் செல்வதை அவன் கண்டான்.

உடனே அவ்வேடன், குடிசை இருக்குமிடத்தை நன்றாகக் குறித்துக் கொண்டு அரசகுமாரனிடம் வந்து, நடந்த விஷயங்களையெல்லாம் உள்ளது உள்ளபடியே சொன்னான்.

அப்பெண்மணி அந்த மான்குட்டியின் காலில் இருக்கும் காயத்தைப் பார்த்து நடுங்கினாள். பிறகு அதற்கு வேண்டிய சிகிச்சைகளைச் செய்து அதைப் படுக்கும்படி செய்து தானும் படுத்துறங்கினாள். அப்புண் சிறிதான படியால் மறுநாட் காலையில் சொஸ்தமாய் விட்டது.

மறுநாளும் அரசகுமாரன் வேட்டைக்குப் புறப்பட்டான். தாரை முதலிய வாத்தியங்களின் கோஷம் மான் காதில் விழவே, வெளியே போக வேண்டுமென்ற எண்ணம் அதற்கு உதித்தது. உதிக்கவே அது சற்குணவல்லியை நோக்கி, "அக்கா! இந்தக் கொம்பு தாரை முதலியவைகளின் சப்தங்களைக் கேட்கவும் 'இவ்விடத்திலிருந்து பறந்து போய்விடலாமா?' எனத் தோற்றுகிறது. ஆகையால் சென்றுவர எனக்கு உத்திரவுகொடு. இல்லாவிட்டால் என் உயிர் நில்லாது." என்றது. சற்குணவல்லி "இதை எவரேனும் பிடித்துவிட்டால், தான் இவ்வுலகில் தனியாக வாழ நேரிடுமே"

என்று துக்கித்தும், அதன் மனம் குளிருமாறே அதற்கு அனுமதி கொடுத்தனள். கொடுக்கவே, அது மிக சந்தோஷத்துடன் வீட்டை விட்டு வெளியே சென்றது.

அரசகுமாரன் இன்றும் இம்மானைக் கண்டவுடன் வேட்டர்களை நோக்கி, "நீங்கள் அதைப் பிடிக்கும்வரை அதைத் தொடர்ந்து செல்லுங்கள். ஆனால் எவனும் அதற்கு எவ்விதத் தீங்கு மிழைக்கக் கூடாது" என்று எச்சரித்து அனுப்பினான். அன்று சூரிய அஸ்தமனமாய் நெடுநேரமாகியும் அதைப் பிடிக்க முடியவில்லை. அவன் தனக்கு முன்பு குடிசையைப் பற்றிய சமாசார முரைத்த வேடனை அக் குடிசைக்கு அழைத்துப் போகும்படி சொல்லி, அவ்விடம் வந்துசேர்ந்தான். அவன் கதவண்டை போய் அம்மானகுட்டி வழக்கமாய்ச் செய்வதுபோல் தான்செய்து கதவைத் தட்டி அழைக்க, சற்குணவல்லி கதவைத் திறந்தாள். உடனே அரசகுமாரன் உள்ளே நுழைந்தான். இவ்வளவு அழகுள்ள பெண்மணியை இக்குடிசையில் கண்டதும், அரசனுக்கு அவளைக் கல்யாணம் செய்துகொள்ள ஆசை உண்டாயிற்று. குடிசைக்குள் நுழைந்தது மானல்லவென்றும், மகுடம் தரித்த மன்னன் மகனென்றும் அவளுக்குத் தெரிந்தவுடன், அவள் திடுக்கிட்டுப் பயந்தாள். ஆனால் அவன் பயந்தெளியும்படி சிறிதுநேரம் அன்பாகப் பேசிவிட்டுப் பிறகு, அவளைத் தன் மனையாளாகும்படி கேட்டான் இவளும் அதற்கு உடன்பட்டாள். ஆனால் அவள் 'நான் மான் குட்டியை விட்டுப் பிரிந்திருக்க முடியாது' என்று சொன்னாள். அவன் அதையும் அரண்மனைக்கு அழைத்துச் செல்லுவதாக வாக்குத்தத்தம் செய்தான்.

இப்படிப் பேசிக்கொண்டிருக்கையில் மானும் வீடு வந்து சேர்ந்தது. உடனே அதையும் பிடித்துக்கொண்டு எல்லோரும் அரண்மனை அடைந்தனர். போய்ச்சேர்ந்த இரண்டு மூன்று நாள் கழித்து அவர்கள் இருவருக்கும் விவாகம் வெகு ஆடம்பரமாய் நடந்தேறியது. சின்னாட்களுக்கெல்லாம் ராஜகுமாரன் அத்தேசத்துக்கு அரசனாயினான். இவர்கள் அநேக வருஷகாலம் சுகமாய் வாழ்ந்திருந்தனர். மான்குட்டியும் ஒருவிதக் குறைவுமின்றி அரமனைத்தோட்டத்தில் சந்தோஷமாய் விளையாடிக் காலம் கழித்து வந்தது.

(இன்னும் வரும்)

ரா. நாகசாமி.

## விடுகதை வினுவுக்கு விடை.

(1) கன்னமதிச் சஞ்சிகையிற் கண்டவிடுகதைக்(கு)
உன்னுவிடை யாம்விவே கோதயமே!—பன்னுகின்ற
பூமிதனிற் பாண்டிநகர்ப் போந்த 'சிவ காசி'யென்றே
சாமிஐயங் கார்க்கிதனைச் சாற்று. —த. அ. ஆறுமுகம்பிள்ளை, முசிரி.

(2) சாமிஐயங் கார்அன்று சாற்றுவினு வுக்குவிடை
பூமியெலாம் போற்றுவிவே கோதயமே!—வீமப்
பவமெலாம் வேரறுக்கும் பான்மையுடைத் தாய
சிவகாசி ஆகுமெனச் செப்பு. —நாராயணசாமி.

## விடையும் வினுவும்.

இதயமே விருளை ஈர்ந்திடக் குணவா
ரிதிவரும் ஈறிலா விவேக
உதயமே! வினுவிற்(கு) உரை'சிவ காசி'.
ஒருவினு நான்கெழுத் துள பேர்
இதயமே வினமுன் எழுத்தின்றேல் 'மாண்(பு)'ஆம்
ஈர்இன்றேல் 'தோற்றம்'ஆம். முதல்நான்(கு)
உதயமே! விரவில் உயர்தலப் பேர். மூன்(று)
ஒன்றின்றேல், 'மதி'ப்பெயர். உரையே.

நடராஜபுரம் சோமசுந்தரம் செட்டி,
காரியதரிசி, ஞானப்பிரகாச சபை, புதுவயல்.

---

## மௌன தேசிகர்—ஓர் ஹாஸ்ய நாடகம்.

நாடக பாத்திரங்கள்.

| | |
|---|---|
| நற்புகழ்மாறன்— | பாண்டிய மன்னன் |
| சமயோசிதன்— | பாண்டியனது முதல் மந்திரி |
| கானப்பிரியன்— | அரசனது இரண்டாவது மந்திரி |
| சமிக்ஞாநாதன்— | சோழராஜ தூதன் |
| வித்யாபூஷணன்— | பாளையங்கோட்டைக் கலாசாலைத் தலைவன் |
| தந்திரதீரன்— | வித்யாபூஷணனது நண்பன் |
| மௌனதேசிகன்— | 'நல்லகண்ணுக்கோன்' என்ற இடையன் |
| இசைவலன்— | பாண்டிய சம்ஸ்தான சங்கீத வித்வான் |
| வாசாலகன்— | கலாசாலை வேலைக்காரன் |
| அதிவேகன்— | பாண்டியனது அரமனைச் சேவகன் |

சபையோர், பிரபுக்கள், பண்டிதர்கள், பக்கவாத்தியக்காரர்,
வேலைக்காரர், முதலியோர்.

நாடகம் நிகழ்விடம்:—

[மதுரைமாநகரிலும், பாளையங்கோட்டையிலும்.]

பொங்கும் மங்களம் எங்கும் தங்குக.

# மௌன தேசிகர்.

## ஓர் ஹாஸ்ய நாடகம்.



### காட்சி—1.

இடம்.—மாறனது கொலுமண்டபம்; காலம்.—பிற்பகல்; பாத்திரங்கள்.— தற்புகழ்மாறன், கானப்பிரியன், ஸமிக்ஞாநாதன், இசைவலன், பிரபுக்கள், சேவகர் முதலியோர்

[ஆசனத்தில் வீற்றிருக்கும் கானப்பிரியன், வந்து கொண்டிருக்கும் பிரபுக்களை வரவேற்று உபசரிக்கிறான். சங்கீத வித்வான் வருகிறான். அவனது ஆட்களும், ஒருவர்பின் ஒருவராய் வருகின்றனர்.]

கான. சரி இன்னும் 20-நிமிஷமே இருக்கிறது, மகாராஜா எழுந்தருள. (இசைவலனை நோக்கி) ஸ்வாமி! உமது கோஷ்டியெல்லாம் சரியாய் வந்து விட்டதா?

இசை. எல்லாரும் வந்து விட்டார்கள். மிருதங்கக்காரன்தான் இன்னும் வரவில்லை, அவனும், ஆச்சு, வந்துவிடுவான்.

கான. அடடா? தாமதமென்ன? மகாராஜா வரும் சமயம் ஆய் விட்டதே?

[மிருதங்கக்காரன் வருகிறான்]

இசை. நல்லவேளை. அதோ அவனும் வந்து விட்டான். (மிருதங்கக்காரனை நோக்கி) ஏனையா இவ்வளவு தாமதம்?

மிருத. இன்னிக் கின்னு பாருங்கோ, சனியன், தொப்பி கிழிஞ்சு போச்சு இங்கிறேன்.

இசை. அப்புறம்?

மிருத. அப்புறம் என்ன? மிருதங்கத்துக்குத் தானு கஷ்டம்? அதக்காட்டினும் நல் மிருதங்கம் கொண்டாந்துட்டேன்; புடிச்சேன் ஒருபய்லே அதுக்கு. இருக்கட்டும், ரொம்ப நாழி ஆயுடுத்தோ?

கான. இல்லே, இல்லை. பதறுதேயும்—சரியான சமயத்தில் தான் வந்திருக்கிறீர். மேலே செய்ய வேண்டியவற்றைச் செய்து தயாராயிரும்.—சீக்கிரம் செய்யும்.

[மிருதங்கக்காரன் ரவைதடவிப் பண்அமைக்கிறான். சிறிது நாழிகைக் கெல்லாம் ஸமிக்ஞா

நாதன் வருகிறான். கர்ன்ப்பிரியன் அவனை அழைத்துச் சென்று அரசனது சிம்மாசனத்திற்கருகில் வீற்றிருக்கச்செய்கிறான்]

சமி. மந்திரியாரே! மணி இப்பொழுதென்ன ஆகிறது?

கான. பிரபு ஐந்தேகால் ஆகும்.

சமி. மகாராஜாவிற்கு உடம்பு இப்பொழுது எப்படியிருக்கிறது?

கான. மத்தியானம் தலைவலி மிகுதி. இப்பொழுது சற்றுக் குணமென்றுதெரிகிறது.

சமி. ஒருவேளை அவர் இன்று இங்குவர முடியாதிருக்குமோ?

கான. இல்லை இல்லை. அவசியம் வருவார். அதிலும் தாங்கள் மகாராஜாவுக்குப் பிராண சினேகர். எவ்வளவு அசௌகரியமிருந்தாலும், தங்களுக்காகவேனும் அவர் வந்தே தீருவர். தங்களைப் பிரிய அவர்க்குச் சிறிதும் மனமில்லை.

சமி. ஆம். பிரிவு எப்பொழுதும் விசனகரமானதே. எனக்கும் அவரைப் பிரிய மனமே இல்லை—ஆயினும் நான் ஊர்செல்ல வேண்டியிருக்கிறது. கடவுளுடைய திருச்சித்தத்தின்படியே எதுவும் நடக்கும்—நேற்றுத்தான் நான் ஊருக்குப் போக எண்ணிய சமாசாரம் தெரிவித்தேன்—அதற்குள் மகாராஜா அவர்கள், என்னைக் கௌரவப்படுத்த இவ்வளவு ஏற்பாடுகள் செய்திருப்பது அவருடைய பேரன்பையே காட்டுகிறது. எனக்கு இன்னும் கொஞ்ச நாளேனுமிருந்து—

[சேவகன் ஓடி வருகிறான்]

கான. (சேவகனை நோக்கி) என்னடா விசேஷம்?

சேவ. எசமான்! மகாராசாவுடைய கட்டியக்காரர் வர்ராங்க—அவருக்குப் பொறகாலே மகாராசா வந்துகிண்டிருக்காங்க. அதோ வர்ராங்க.

[கட்டியக்காரன் வருகிறான்]

கட. ராஜாதிராஜர், ராஜமார்த்தாண்டர், ராஜகம்பீரர், ராஜகோலாகலர், பாண்டிய மண்டலாதிபதி, சந்திரவம்ச திலகர், லோகரக்ஷகர், மாட்சிமைதங்கிய மன்னர் மன்னராகிய மகாராஜா அவர்கள் வருகிறார்கள். பராக்கு!

[மகாராஜா வருகிறார். யாவரும் எழுந்திருக்கின்றனர். அரசன் ஆசனத் தமர்ந்ததும் யாவரும் அமருகின்றனர்.]

தற். ஸமிக்ஞா நாதனுடன் கை குலுக்கிப் பின் (கானப்பிரியனை நோக்கி) மணி என்ன ஆகிறது? பாரும்.

கான. மகாராஜா ஐந்தரை மணி ஆகிறது—

தற். நாமும் சரியான நேரத்தில்தான் வந்திருக்கிறோம். எங்கே 'தாமதமாய் விட்டதோ' என்ற யோசனை இருந்தது—ஸமிக்ஞாநாதர் வந்து வெகுநாழிகை நமக்காகக் காத்துக் கொண்டிருந்தார் போலும்—

சமி. இல்லை-இல்லை. 10-நிமிஷத்திற்கு முன்புதான் வந்தேன்.

தற். (கானப்பிரியனை நோக்கி) பாட்டுக் கச்சேரிக்கு எல்லாம் தயாராய் விட்டதா?

கான. மகாராஜ்! எல்லாம் தயார்.

தற். பின்னை, ஆரம்பிக்க ஏற்பாடு செய்து விடுகிறது தானே?

கான. உத்தரவு. (இசைவலனை நோக்கி) மகாராஜா உத்திரவாய் விட்டது. ஆரம்பிக்கலாம். தேசவாழ்த்துடன் தொடங்குக.

[சங்கீதக் கச்சேரி நடக்கிறது.]

## தேசவாழ்த்து.

### பாரத ஜாதீய கீதம்.

வாழிய! பண்டைப்பெயரே வாய்ந்திடுமா
வளநாடே! மாசில் தூய்மை
சூழிசைசேர் பாரதமே! தாயகமே!
தூய எலாம் தோன்றும் பூவே!
பாழியநின் பெருந்தகைமைப் பான்மையையாம்
பயிலஅருள் பாலிப் பாய்நீ
ஆழிபுனை எப்புவிக்கும் ஆருயிரே!
நினதுரிமை ஆம்எம் உள்ளம்.

### வேறு.

மாரத வீரர்ம லிந்தநன் னாடு
மாமுனி வோர்பலர் வாழ்ந்த நன்னாடு
நாரத கானந லந்திகழ் நாடு
நல்லவை யாவையும் நாடுறும் நாடு
பூரண ஞானம்பொ லிந்தநன் னாடு
புத்தர்பி ரான்அருள் பொங்கிய நாடு

பாரத நாடெ பழம்பெரு நாடு
பாடுவம் இதுமி தற்கிலை யீடே.

வேறு.

அடல்மிகுபன் னாடுகளும் ஆகிஅழி
வுடைந்தபோ. ஆயின், நீயோ,
படிமிசைமா றுங்காலப் பான்மையினும்
பழுதறநிற் பவளா கின்றாய்!
நெடியவன்செல் வப்புதல்வி! நீயென்றும்
அப்படியே நிற்பாய்: நின்னைக்
கடவுளர்தம் பேரருளாற் கசிந்துவந்து
கனிந்துகடைக் கணிக்கின் றாரால்.
பலமுடனே பெரும்புயல்நின் படிவமிசைச்
மோதிடினும் பாராட் டாமே
அலைவறநம் பிக்கைவலி யால்உறுதி
யாய்நிற்பாய், அமைதி காண.
உலகையெலாம் உய்விக்கும் உயர்உரிமைத்
தெய்வீகம் உனதே ஆகும்.
நிலைபெறமா னிடர்க்கிதுவே நேர்விளக்கா
நீடூழி நிலவும் மாதோ.

[இவைபோன்ற சிலபாடி, தேவாரம், திருவாசகம், திருப்புகழ், திருவாய்மொழி, ஜாவளி, கீர்த்தனை முதலியன பாடுகி றார்கள். கச்சேரி நிறைவேறியதும்,]

உம்—இவ்வளவு நாள் சேர்ந்திருந்து திடீரென்று பிரிகிற தென்றால் எனக்கு மிகவும் விசனமாகத்தான் இருக்கிறது— தாங்கள் எதைக் குறித்தோ யோசனை செய்வது போல் காணப்படுகிறதே. எதைப்பற்றி யென்று நான் கேட்க லாமோ?

ஒன்றும் இல்லை—அநேகமாய், நான்கண்ட நாடுகளில்உள்ள ஜனங்கள் ஒருவர்போல் யாவரும் வீணுக வாயைச் செலவ ழித்துப் பேசுகிறார்களே யொழிய, கைமெய் காட்டி, நயன பாஷை முதலிய சமிக்ஞைகளால் பேசுகிறார்கள் இல்லை சமிக்ஞைகள் மூலமாகவே அளவளாவி ஒருவர் கருத்

ஒருவர் அறிவதினும் ஆனந்தம் வேறுளதோ?—ஆனால்—குற்றம் குடிகளதன்று. தக்க போதனைசாலைகளும், சாமர்த்தியம் வாய்ந்த போதகாசிரியரும் இருந்தால் அல்லவோ அவர்களால் இவ்வித்தை பயிலமுடியும்! ஏதோ, இப்படி யெல்லாம் உளறுகிறேன் என்றே நீங்கள் நினைக்கக்கூடும். நான் சொல்வதெல்லாம் உங்களுக்கு ஆச்சரியமாகவே இருக்கலாம். உள்ளபடியே, எனக்கு அதில் திறமையும் பிரியமும் உண்டு. அதனால், நான் சென்ற இடங்களில் எல்லாம், குறிப்புணர்ந்து விடை கூற வல்ல 'எவரேனும்—ஒருவரேனும்—இருக்க மாட்டார்களா' என்று அதி ஆவலுடன் கவனித்தும் விசாரித்தும் வருகிறேன். இதுவரை ஒருவரையும் காணேன். வருஷம் ஐந்தாய் விட்டன, நான் இங்குவந்து. நான் என் ஊருக்குத் திரும்பும் காலமும் நெருங்கி விட்டது. "இந் நாட்டிற் கூட ஒருவரையும் காணவில்லையே! என்ன ஆச்சரியம்!" என்று என்னை அறியாமலே யோசனை சென்றது.

தற். என்ன! என்ன!! சமிக்ஞா நாதரே! நன்றாகச் சொன்னீர்! சபாஷ்! சபாஷ்! நீர் பார்த்த நாடுகளில் சமிக்ஞை யறிய வல்லவர்கள் இல்லாவிடில், 'உலகமே அஸ்தமித்து விட்டது' என்று சொல்லிவிடுகிறதா? பேஷ்! வாயை அலம்புங்கள்.

சமி அரசே! கோபம் வேண்டாம். நான்சொல்லியதும் எண்ணியதும் தவறாயின் மன்னிக்க வேண்டுகிறேன். எங்கேனும் ஒருவர் இருப்பின் தயைசெய்து அறிவிக்க வேண்டுகிறேன்.

தற். அப்படிக் கேளுங்கள். தீரவிசாரியாமல் 'இல்லை' யென்று துணிந்து கூறுவது தவறன்றோ? 'வாய்புளித்தது மாங்காய் புளித்தது' என்றுபேசலாகாது பாருங்கள்.—ஏன்?—என் நாட்டிலேயே ஒரு அபிநய சாஸ்திர நிபுணர் இருக்கின்றார். அவருடைய பெயரே மௌனதேசிகர். அவர்—"

சமி. (ஆனந்தமும் ஆச்சரியமுங் கொண்டு) அரசே! அரசே!! அவசியம் அம்மகானை நான்தரிசிக்க வேண்டுமே!

தற். (தனக்குள்) அடடா! இதென்ன கஷ்டம்! கிணறு வெட்டப் பூதங்கிளம்பினது போல் இருக்கிறதே. சமிக்ஞையாவது? சாஸ்திரமாவது? இந்தஇழவெல்லாம் யாருக்குத் தெரியும்?

நான் கௌரவமாக ஏதோ ஒரு பொய் சொல்ல, இடுக்கியில் அகப்பட்ட எலிபோல் வேதனைப்பட லாயிற்றே! உம்— ஏதேனும் சாக்குப் போக்குச் சொல்லிப் பார்ப்போம்:— (வெளிப்படையாய்) பூ! இதற்கா இவ்வளவு ஆத்திரம்! அவசியம்-பார்க்கிறது. இப்பொழுது தாங்கள் ஊருக்குப்போகிற அவசரத்தில் இருக்கிறீர்கள். நாம் பிழைத்திருந்தால் தாங்கள் திரும்பிவந்தவுடன் அவசியம் பார்ப்போம்.

சமி. அரசே! மன்னிக்க வேண்டும். ஐயோ! இதில் எனக்கு இருக்கும் பைத்தியம் எதிலும் இல்லை. நான் என் சொந்தக் காரியமாகத்தான் ஊர் திரும்ப எனது அரசாங்கத்தாரிடமிருந்து உத்தரவு பெற்றது. நான் இஷ்டப்பட்டபோது புறப்பட்டால் என்னை ஏன் என்று கேட்பார் எவருமில்லை. நீண்டகாலமாக எனக்குள்ள இவ் ஆவல்தீர, இரண்டொருநாள் இங்கு தாமதித்துச் செல்வதால் குடி முழுகிப் போய் விடாது! தாங்கள் கூறும் சமிக்ஞா விற்பன்னரை மட்டும் நான் காணப் பெற்றால் அதனினும் எனக்கு மகிழ்ச்சி அளிக்க வல்லது மற்றெதுவும் இல்லை.

தற். இதேதடா பிராண சங்கடம்! விளையாட்டு வினையாயன்றோ முடிந்து விட்டது! (வெளிப்படையாய்) ஐய! இவ்வளவு ஆசை உங்கட் கிருப்பதால் அவசியம் நம் அபிநயம் வல்ல அபிநவ போதகரைப்பார்த்தே போங்கள். எனக்கும் அதில் தான் திருப்தி. ஆனால் இதில் ஒருகஷ்டம்—

சமி. என்ன! நீங்கள் சொல்வது எனக்கு விளங்க வில்லையே. இதில் கஷ்டம் என்ன?

தற். வேறொன்று மில்லை. அவ்வித்வான் இவ்வூரில் இல்லை.

சமி. இவ்வூரில் இல்லையா? பின்னே எங்கே அவர் இருக்கிறார்?

தற். அதுதானே சொல்ல வந்தேன். அவர் பாளையங்கோட்டையில் இருக்கிறார்.

சமி. நல்லவேளை. கைக்கெட்டியது வாய்க் கெட்டாமற் போய் விடுமோ என்று பயந்தேன். அவர் பாளையங்கோட்டையில் இருந்தால் என்ன பிரமாதம்?

தற். பாளையங்கோட்டை எங்கிருக்கிறதெனத் தாங்கள் அறியீர்கள் போலும். அது மதுரையிலிருந்து 100 மைலுக்கும் அப்பால் அன்றோ உளது?.

சமி. நூறுமைலா ஒரு பிரமாதம்? பத்து நூறுமைலுக்கு அப்பால் அவர் இருந்தால் தான் என்ன?

தற் (திடுக்கிட்டு) அதற்காகச் சொல்லவில்லை. நாளைப் பிரயாணம் என்றீர்கள். மறுபடியும் இரண்டொரு நாள் தாமதம் ஏற்பட்டாலும் பாவாயில்லை என்றீர்கள். ஆகவே நீங்கள் அதிகமாகத் தாமதித்தால் மூன்று தினங்களே தாமதிக்கலாம். அதற்கு அதிகம் தாமதிக்க முடியாதன்றோ? அதிவிரைவான குதிரையில் நம் வித்வான் ஏறி வந்தாலும், அவர் இங்கு வந்துசேர ஏழெட்டுத்தினங்கள் பிடிக்குமே—

சமி. இதற்கா யோசிக்கிறீர்கள்! அவ்வளவு சிரமம் அவர்க்கு வேண்டாம். நான் என் பொருட்டு ஒருவருக்கும் வீண்சிரமம் கொடுப்பதில்லை. அவரது இருப்பிடம் மட்டும் சொல்லிவிடுங்கள். மீதி விஷயங்களை நான் பார்த்துக்கொள்ளுகிறேன்.

தற் இருப்பிடம் தான் 'பாளையங்கோட்டை' என்றேனே.

சமி. பாளையங்கோட்டையில் எந்தஇடத்தில்? அதல்லவா கேட்கிறேன்.

தற் (தனக்குள்) காலைச்சுற்றின பாம்பு கடியாமல் விடாது. இனித்தப்ப வழியில்லை—இப் போதைக்கு ஏதேனும் சொல்லிவைப்போம். (வெளிப்படையாய்) அங்குள்ள கலாசாலையை அடுத்த ஓர் மடத்தில் ஐய!—இருக்கட்டும். கொஞ்சம் நான் சொல்வதைத் தயை செய்து கேட்கவேண்டும். ஊருக்குப் போய்த் திரும்பி வாருங்கள் நானும் உங்களுடன் புறப்படுகிறேன். இருவரும்சேர்ந்து செல்வோம். இப்பொழுதே புறப்படுவோம் என்றால் எனக்குச் சில அசௌகரியங்கள் இருக்கின்றன. உடம்பும் சரியாயில்லை

சமி. அரசே! உங்களைச் சிரமப்படுத்த எனக்குச் சிறிதும் இஷ்டமில்லை. அவரது இருப்பிடம் மட்டுமே நான் அறியவேண்டிய காரியம். தங்கள் அன்பிற்கு வந்தனம். எது எப்படியிருந்தாலும் அவரைப் பார்த்தே திரும்புகிறதென்று தீர்மானித்து விட்டேன். இனிஉங்களைச்சிரமப்படுத்த மாட்டேன். வந்தனம் நான் போய் வருகிறேன்.

[போகிறான்: எல்லாரும் போகின்றனர்.]

(காட்சி முடிகிறது)

ம. கோ.

## மூன்று எறும்புகள்.



[இது ஆங்கிலப் புலவர் ஒருவர் எழுதிய "The Three Ants" என்பதைத் தழுவி எழுதியதாகும். இதனை ஆங்கிலத்தில் எழுதியோர் இன்னாரெனத் தெரியவில்லை]

கார் எறும் பொன்று, தன் கையால் எடுக்கவும்
உருட்டவும் ஒண்ணா ஒரு கோதுமையைக்
கண்டுநின் றளவில், அண்டையி லேஓர்
அன்னிய எறும்பொன் றங்குற, "ஐய!
இதையான் இருக்கும் இடத்தினில் உய்க்க
உதவி புரிக" என் றுரைத்தலும், "ஆ! ஆ!!
என்னுடை வேலைகள் எத்தனையோ உள.
வேண்டுமேல் நீயே ஆண்டது கொண்டுசெல்"
என்ன உரைத்துத் தன்னயங் கருதிஅவ்
அயலெறும் பெங்கோ அயிலச் சென்றது.
இந்தக் காரெறும் பினத்தைச் சேர்ந்த
மற்றோர் எறும்பங் குற்றது — உற்றஅவ்
எறும்பு தன்னினத் தெறும்போர் உதவி
உன்னி நிற்பதை உணர்ந்து, தன்னால்
இயன்ற உதவி இயற்றிட நினைத்துஅக்
கோதுமை மணியைக் கொண்டுசேர்ப் பித்தது.
இக்கதை படிக்கும் யாவரும் நற்பயன்
அடைவுறலாகும். தடையே இதில்இலை.
சிறுவிஷ யத்திலும் சிறியீர்! இக்கார்
எறும்பின் நிலைநீர் எய்தவும் நேரும்.
'விரும்பிநீர்உதவி வேண்டிடுங் காலை
வேற்று மனிதர் ஆற்றிடார் உதவி'
என்பதை அன்னிய எறும்புகற் பிக்கும்;
'நம்இனத் தோரே நமக்காம் உதவி
வலியச் செய்வது வழக்க' மென்பதைஅந்
நற்குண எறும்பு நன்குணர்த் திடும். அவ்
அற்பப் பிராணியும் அதன் இனத்திற்கு
விரும்பிநல் உதவி புரிந்தது போல
நீரும் நம்மவர் யாரும் நலமுற
உதவி புரிந்திவ் வுலகினுய் வீரே.

A. R. ஸ்ரீநிவாச முதலியார்,
ஆனைமலை.

# காலஞ்சென்ற ஸ்ரீமாந் கு. முத்துத்தேவர் மீது இரங்கற் பாக்கள்.



எத்தேமும் எத்திசையும் இனிதேத்த இலங்கும்அழ கியநல் லூரில் [ய்
இத்தேவர் குலத்திலுதித் தினியதமி ழினைவளர்த்தாய்! இசையால்மிக்கோ
அத்தேவர் குலம்மகிழ அமரர்உல கெய்தினையோ, அறிவி னுன்ற
முத்தே! நன் நவமணியே முகுந்தனடி புகுந்தனையோ? முனிவிலாதோய்!

சிறுபருவம் கலம்ஏறி நெடுவாரி கடந்திலங்கைத் தேயம்எய்தி
மறுவலுமத் தேத்தியலும் வனப்புங்கண் டகமகிழ்ந் தாங் கிலமுங்கற்றுப்
பொறுமையுடன் தாய்நாடு மீண்டடைந்தெம்நகர் இலங்கப் புரிவல்என்று
முறைமையின்வித் யாசாலை நிறுவியமுத்துக்குரிசில்! முடிந்திட்டாயே!

நீயேமுப் பான்ஆண்டு நேரொருவர் இலாத்தலைமை நிலைவகித்துத்
தாயேஎன்(று) உலகிலுளோர் சாற்றிடப்பல் லாயிரமா ணவர் தங்கட்கு
கூயேநீந் தமிழ்அமுதிங்(கு) ஊட்டுவித்தாய்! நின்பெருமை கூறற்பாற்றோ?
போயே நீ முடிந்தனையே! முத்தேனும்நல் லுத்தமப்பேர் புனைபூ மானே!

போற்றிசெயும் நினதுவித்யா சாலையைமூ வாயிரம் வெண்பொற்கா சீந்து
தோற்றமுறும் அரசியலார் அழகுபெறக் கட்டுவித்த சுபநற்செய்தி
நாற்றிசையோர் களும்உணர்வர். நின்னாலன் றோஇவ்வழ கியநல் லூரார்
ஏற்றமுற வாழ்வதும். எங்கள் முத்துப் பூபதியே இயம்பிடாயே.!

பாலருந்தல் மறந்தவுடன் சிறார்அனைவோ ரையுநின்பால் பரிவின் ஈயச்
சீலமுடன் தமிழ்அமுதூட் டுவித்(து)அநே காயிரம்நஞ் சிறுவர்தம்மை
ஞாலமிசை நீவளர்த்தாய். சகரனுநின் ஒப்பெனன நவிலலாமோ?
சோலமுறும் எங்கள் முத்துக் குருமணியே! பரன்உலகம் குடிபுக்காயே!

நின்னுழைக்கற் றுணர்பல்லா யிரவர்மா ணவரிதயம் நெடிதிரங்கப்
பொன்னுலகிற் புத்தேளிர் நின்வரவை நனிவிரும்பப் போயினையோ?
நன்னெறிசேர் மாணவகன் நாராயணனைக்காண நயந்தாய்கொல்லோ?
என்நினது திருவுள்ளம்? எமக்கியம்பாய் இசைவளர் முத்(து) எனுஞ்சீ [மானே

தேவபாடையினொடும்இத் தீந்தமிழை விழைந்துயர்புத்தேள்வேந் தன்னைக்
கூவியேகொண் டனனோ குவலயத்தில் நினைப்போல்நற் குணம்வாய்ந்தன்பு
மேவியநல் ஆசிரியர்வேறெவர்? நின் மாணவர்கள் மெலிந்தி ரங்கத்
தாவியேவிண் அடைந்தாய்தகுமோநிற்கெங்கள் முத்துத்தமிழ்வல்லோனே?

வெய்யபிணி பசிமுதற்பல் வேதனையாற் புண்படுத்தும் வினையால் ஆம்இப்
பொய்யுடம்பு தனைநீக்கிப் புகழுடம்பு பெறுவதுவே போதம் என்னாத்
துய்யபுகழ் உருக்கொண்டு தொல்லையாம் அவ்வுருவைத் தொலைத்திட்டா
ஐய! உயர் இந்த்ரகுலா திபமுத்து எனுந்திருப்பேர் அமைந்தமாலே. [யோ?

நிலமலைநன் னிறைகோல்ஒண் மலர்நிகர்மாட் சிமைவாய்ந்த நெடியோ
[னே! எம்
குலமுதல்ஆ சிரிய!நினைப் பிரிந்ததுயர் தவிர்தலென்றே? கூறாய்இன்னும்
பலதிருவா சகமுநின்வாய்க் கேட்பவுளம் மகிழுமொரு பகலுமுண்டோ?
அலர்கதிர்ஞா யிற்றன்னசீர் அவிர்புகழ் முத்தேனுந் தமிழ்தேர்அறிஞரேறே!

வாய்த்த'அரி யும்சிவனும் ஒன்(று).அறியா தார்வாயில் மண்'என் றோதும்
மூத்தமொழி வழியொழுகி முறைமையிற் றண்டமிழ் வளர்த்த மொய்ம்பி
னோனே!
எத்தும்இரு பதமுமொருங் கெய்தினையோ,அல்லதுவே றெங்குற்றாயோ?
சீர்த்திமிகு பெரியோய்!எம் ஆசிரிய னுமுத்துத் திறமையோனே!

சந்திரனை நிகர்வதன சுந்தரநன் மாணவர்க்குத் தாயேபோலச்
செந்தமிழ்அந் தீஞ்சுவையைத் தெவிட்டநனி புகட்டுமுயர் திறமைவாய்ந்த
தந்திரமந் திரகுணவெண் பங்கயப்பூ மகட்கடிமைத் தன்மைபூண்ட
இந்திரகு லாதிபமுத் தென்றதிரு நாமவள்ளால்! எங்குற் றாயோ!

பிங்களஆண் டினிற்கன்னித் திங்களேழ் திருமலைஎம் பெருமாற்குற்ற
மங்களம்சேர் சனிவாரம் வளர்பிறைசுத் தமித்திதியின் மகிமைவாய்ந்த
எங்களா சிரியன்முத்துப் பூபதிஇவ் உலகவாழ் வினைநீத் தோர்வெண்
திங்களொடு கங்கையணி செஞ்சடிலப் பரன்பாதம் சேர்ந்திட்டானே.

ஸ்ரீ முத்துத்தேவரின் மாணவரும்,
செந்தமிழ்க்கலாசபை உபாக்கிரசனுதிபதியுமான
தி. அ. வேங்கடசாமி ரெட்டியார்,
குட்டிலொட்டி.

---

## சமாசாரக் கொத்து.



மேலச்சிவபுரி சன்மார்க்க சபை:—இதன் எட்டாம் வருட பூர்த்திக் கொண்டாட்டம் செப்டம்பர்மீ 7உயன்று அங்குள்ள 'சன்மார்க்க சபா மண்டபத்தில், புதுக்கோட்டை மகாராஜாக் கலாசாலைப் பண்டிதர் ஸ்ரீ வி. டி. ஸ்ரீநிவாசையங்காரது அக்ராஸநத்தின்கீழ் நன்றாக நடைபெற்றதென்றும், அவ்வமயம் கலைஞானமிக்க பெரியோர் பலர் உபந்யாசம் செய்தனரென்றும் அறிகிறோம்.

நச்சினார்க்கினியர் ஞாபகச் சின்னம்:—மதுரை மாணவர் செந்தமிழ்ச் சங்கத்தார் வருஷந்தோறும் நடத்திவரும் இப்பரீக்ஷை,இவ்வருஷம் சென்ற அக்டோபர்மீ 6உயன்று மதுரைக் காலேஜில் நடைபெற்றது.

308 மாணவர்கள் தலைக்கு 2அணா:கட்டி இதற்கு விண்ணப்பஞ் செய்து கொண்டனர். பரீக்ஷா முடிவு விவரம் டிசம்பர்மீ 1௳வெளியாகும்.

விவேகாநந்த சபை:—மதுரை மாணவர் செந்தமிழ்ச் சங்கத்தைச் சேர்ந்த இச்சபையை முன்னிட்டு, அக்டோபர்மீ 13௳யன்று அமெரிகன் காலேஜ் ஆங்கிலாசிரியர் மிஸ்டர் என்.ஆர். கேதாரிராவ் பி.ஏ. (ஆனர்ஸ்) "ஸ்ரீமத் "விவேகாநந்த ஸ்வாமிகளும் அவர் செய்த வேலைகளும்" என்பதைப் பற்றி ஓர் அரிய உபந்யாசம் செய்தனர். ஸ்வாமி விவேகாநந்தரது ஜீவிய சரித்திரத்தை அதிநன்றாக எழுதுமாறு நடைபெற்ற 'எல்லா—இந்திய'ப்போட்டைப் பரீக்ஷையில் முதன்மையாய்த் தேறிப் பொற்பதக்கம் பெற்றவர் இவ்ராயர். இவர் பிரசங்கிக்குங்காலை, திருவனந்தபுரம், பரோடா, மைசூர் ஆகிய மூன்று இடங்களிலும் திவானாக இருந்து புகழுற்ற கனம் வி.பி. மாதவராவ் ஸி.ஐ.ஈ. அவர்கள் அக்ராஸநம் வகித்தனர். இருவரது திவ்யப் பிரசங்கங்களும் முடிந்ததும் ஸ்ரீம. கோபாலகிருஷ்ணையரவர்கள் எழுந்து,

தாதவிழ் கடுக்கையந் தார்புனையும் எம்மான் றருதிரு வருள்நலத்தாற்
சதுர்வேத பாரகர்குலத்தின்மணி யாயித் தராதலம் விளங்கவந்தோன்,
ஆதவனென்னப்பல்கலை யாய்ந்துளோன்,குடந்தைநகர் அவதரித் தோன்,ப
அணிதிகழ்அனந்தபுரம் மைசூர்சமஸ்தானமாமிவற்றில்திவானு[ரோடா
மேதக அமர்ந்தோன்,நம்வி.பிமா தவராவ்விரும்பு 'ஸி.ஐ.இ'யென
வேந்தர்தருபட்டமுற்றோன்,விவேகாநந்தமெய்த்தவபெயர்கொள்சபை
சீதநனெனச்சபா நாயகம் வகிக்கயாஞ் செய்தவமே னுவறிகிலேம்![யிற்
சித்தமுடன் எமையாத ரிக்கவென்றேயிங்குசேர்ந்தவேள் கருணைவாழி

## வேறு.

வாரிதியிற் புகுந்துபுனல் முகந்துபுவி யோர்க்குதவும் மங்கு லேபோல்
ஆரியஆங் கிலத்தமிழ்நூற் கடல்முகந்து விவேகாநந் தப்பே ராசான்
சீரியலுஞ் சரிதையைக்கேட் டோர்வேட்பப் பொழிந்தான்இச் செம்மல்
[யாவன்
பேரெவனென் பார்க்குரைத்தும்: என்.ஆர்.கே தாரிராவ் பி.ஏ.ஆனர்ஸ்

என்னுமறை யோர்திலகன் பிரசங்கங் கேட்டேமிங் கென்னே யீது
கன்னலெனப் புகல்வேமோமுக்கனியென் பேமோகற்கண்டென்போமோ
இன்னமிழ்தென்பேமோயாதெனத்தேரேம். அதற்கதையே யிணைய தென்
பன்னருமிப்பிரசங்கம் பொழிந்தோனுங் கேட்டோரும்பாரில்வாழி [பேம்

## வேறு.

வாழி!விவேகாநந்த மாதவன்பேர் நற்சபையும்
வாழி!சபா நாயகனும் வள்ளலும்—எழிசைநூல்
வல்ல புலவோரும் வாழியிங்கு மன்னியசீர்ச்
செல்வர்களும் வாழி சிறந்து

விசனகரமான மரணம்:—குட்டிலொட்டி என்ற அழகிய நல்லூரில் உள்ள 'செந்தமிழ்க் கலாசபை'த்தலைவராயிருந்தவரும், ஷையூர் பாடசாலைத் தலைவருமான ஸ்ரீ முத்துத் தேவரது மரணங் கேட்டு மிக விசனிக்கிறோம்.

—பத்திராதிபர்.

## புத்தக மதிப்புரை.



**ஹாஸ்ய மஞ்சரி:**—இது 150 வேடிக்கை விஷயங்கள் அடங்கிய ஓர் சிறு நூல். தமிழ்அபி விருத்திக்காக உழைத்துவரும் சென்னை மெஸர்ஸ் ஜி.ஏ.வைத்தியராமன் அண்ட் கம்பெனியார் பதிப்பித்ததாகும். இவ்விஷயங்கள் பல்வேறு வகுப்புக்களாகப் பிரிக்கப்பட்டுள்ளன.

**பேற்றமனம் பித்து:**—இதுவும் ஜி. ஏ. வைத்தியராமன் கம்பெனியார் பதிப்பித்ததே. கிராம வாழ்க்கையின் இயல்பை யாவரும் அதிவினோதமாக அறிந்து மகிழ எழுதப்பட்டுள்ளது. இதன்விலை அணா 2.

**ஸ்வர்ணகாந்தி அல்லது இரு மனைவிகள்:**—இது செங்கனிபுரம் ஸ்ரீ எஸ். வி. நடராஜன் என்பார் எழுதியது. இரண்டு ஆப்டோன் படங்கள் கொண்டு அழகாக அச்சிடப் பட்டுளது. ஸ்திரீகள் படித்தற்கேலாத சில பதங்களும், வர்ணனைகளும், இதில் இருக்கின்றன. விலைரூபா 1. வேண்டுவோர் வேலூர் ஜனோபகாரி ஆபீசுக்கேனும், இயற்றியோர்க்கேனும் எழுதுக.

பத்திராதிபர்.

---

## இனிய தமிழ் நாவல்கள்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| ரத்னபுரிரகசியம் | 3–4 | இந்திராணி | 1—0 | தலையணை மந்திரம் | 0–8 |
| கன்னியின்முத்தம் | 3–0 | ரங்கநாயகி | 1—0 | கோமளம் குமரி | 0–8 |
| மாண்டிகிருஸ்டோ | 2–8 | அந்தப்புரகாதல் | 1—0 | தீனதயாளு | 0–6 |
| அராபிக்கதை | 2–8 | தேவசுந்தரி | 0–14 | ஞானம்பாள் | 0–6 |
| லண்டன்திருடர் | 2–4 | லீலா | 0–12 | கமலாம்பிகை | 0–4 |
| வீரவர்மன்வெற்றி | 2–0 | மங்கைக்கரசி | 0–12 | கருணாகரன் | 0–4 |
| கனகபூஷணம் | 2–0 | தினகரசுந்தரி | 0–12 | ஜரத்காரு | 0–5 |
| தனபாலன் | 1–8 | அமீர்வலி | 0–12 | பஞ்சதந்திரம் | 0–4 |
| ஜடாவல்லவர் | 1–8 | பிரேமகாந்தன் | 0–12 | மிருச்சகடி | 0–4 |
| நீலா | 1–4 | கோகிலாம்பாள் | 0–12 | சாகுந்தலம் | 0–4 |
| தர்மாம்பாள் | 1–2 | புஷ்பவனம் | 0–10 | வசந்தஸேனை | 0–4 |
| விநோதரசமஞ்சரி | 1–2 | குணசீலன் | 0–10 | ஸர்தார்ஸிங் | 0–3 |
| வரதசுந்தரம் | 1–0 | மாலினீமாதவம் | 0–10 | கிரிஸல்டா | 0–3 |
| வசீகரி | 1–0 | வன ஜாக்ஷி | 0—8 | மங்களாம்பாள் | 0–8 |
| குண சுந்தரம் | 1–0 | சாரதாம்பாள் | 0—8 | அஞ்சனாக்ஷி | 2–4 |

N.B.—வி.பி. சார்ஜ் பிரத்தியேகம். அமராவதி என்னும் இனிய தமிழ் நாவலொன்றை மேற்கண்ட புஸ்தகங்களுக்கு ஆர்டர் செய்தால் இனாமாக அனுப்பப்படும்; அல்லது போஸ்டேஜுக்காக அரையணா ஸ்டாம்பு அனுப்பினால் "அந்த" இனாமாக அனுப்புவோம். எல்லாவித தமிழ் நாவல்களும் கிடைக்கும்.

ஏஸ். ஜி. ஐயர் அன்டு கம்பெனி, திருவல்லிக்கேணி, சென்னை.